உ

சிவமயம்



# கோவிலூர்
# சமாதி ஆலய விளக்கமும் திருநக்ஷத்திரங்களும்



இயற்றியவர்:
விரைக் கவிராஜ பண்டிதர் பரம்பரை
வேம்பத்தூர்
சௌந்தர பாரதியாரவர்கள் புத்திரர்
**அம்பிகாபதி பாரதி அவர்கள்**

காரைக்குடி
செட்டிநாடு அச்சகத்தில்
பதிப்பிக்கப்பெற்றது
1950

24-4

உ

சிவமயம்

சமிவன க்ஷேத்திரமென்னும்

# கோவிலூர்த் திருமடாலயத்தில் விடுபேறுற்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களின்

# சமாதி ஆலய விளக்கமும் திருநட்சத்திரங்களும்

---

**காப்பு**

கோவிலூர் மடாலயங் குலவிய பெரியோர்
சமாதி ஆலயத் தகவுறு விளக்கமும்
சித்தி யடைந்த தினமுஞ் செப்ப
வன்னி விநாயகர் மலரடி யிணையை
மன்னியே போற்றி மகிழ்வோம் யாமே

நூல்

**நிலைமண்டில அகவற்பா**

சீர்வளர் கோவிலூர்ச் செழும்பதி தன்னில்
ஏர்வளர் மடாலயத் திருந்த பெரியோர்
ஞானநன் னூல்களை நன்கு பயின்று

மோன சமாதி முற்றிய திறத்தமர்
ஆலய விளக்கமும் அன்னவர் பின்னர்

ஈனமார் பிறப்பினில் இனிப்பிற வாமல்
வீடுபே றதனை விழைவுட னடிக்
கூடியே நின்று குணமிகு சிறப்பொடு
ஆக்கை உபாதியை யகற்றியே பிரம
மோக்க மடைந்த நாள்களு மொழியின்

தங்கிய புகழ்சேர் **பங்குனித்** திங்களில்
உத்திர நாள்தான் முத்திரா மப்பேர்
பெற்றிடு பெரியோர் உற்றது வீடு
சித்திரை நாளே மற்றொரண் ணாமலை
முத்தி யடைந்து முடிந்து சிறந்தது

ஒணம் அதுவே பேண நின்ற
முத்தைய சாமி முத்திபெற் றதுவாம்
**சித்திரைத்** திங்களிற் சேர்ந்திடும் பரணியில்
இத்தரைக் கோட்டையூர் அழகப்ப ஏந்தல்
சித்திபெற் றுயர்ந்து சிறந்து திகழ்ந்தார்

**தக்கலை காசி**யிற் சார்உத் திரத்தில்
சொக்கப்ப சுவாமியாய்ச் சொல்லும் பெரியார்
மிக்கவீ டடைந்து விளங்கி மிளிர்ந்தார்

ஓங்கிடும் விசாக உயர்பெரு நாளில்
பாங்கமை விரமா தவனார் பகரும்

அரும்பொரு ளான பெரும்பொரு ளானார்
திருவோ ணத்திற் செப்பும் அண் ணாமலை
ஒருவி டடைந்து ஓங்கி யுயர்ந்தார்
ஆனி உரோகணி ஆனநன் னாளில்
ஈனமில் சின்னத் துறவென் றியம்ப

ஆன அருணா சலனார் வீடாம்
சுந்த நலஞ்சேர் அத்தநன் னாளில்
பெரிச்சி யப்பரும் பேசிடும் புகழ்சேர்
மகாதேவ னாரும் மாண்பதம் அடைந்தனர்
ஓங்கிடும் விசாக உயர்பெரு நாளில்

பாங்கமை சபாபதி பரகதி பெற்றார்
ஆடித் திங்களில் நாடிடும் நல்ல
உரோகணி மீனில் உயர்ந்திடும் நாளில்
இதம்பெற நின்ற சிதம்பர முனிவர்
நிதந்தொழும் நல்ல பதம்பெற லானார்

மகநாள் தன்னில் அகமதை விட்ட
பழநி யப்பர் பரகதி சேர்ந்தார்
பூரநன் னாளிற் புகழ்ந்திடுந் துறவை

ஏர்பெறக் கொண்ட எழிலரு ணாசலர்
பார்தொழு பதத்தைப் பண்பாய்ப் பெற்றார்

மேதகும் ஐப்பசி மிருகசீ ரிடத்தில்
ஓதரும் அழகப்ப சாமியாம் ஒருவர்
போத நலனுற் புகுந்தார் வீடு
அத்தநன் னாளில் அருணா சலப்பேர்
பெற்றிடும் பெரியோர் உற்றார் பேறு

பிறங்குபூ ரத்தில் திறங்கொளும் நல்ல
நாரா யணப்பேர் நன்கமை துறவோர்
ஏரார் தன்வடி வெய்தி மறைந்தார்
பாரார் உத்தி ராடம் அதனில்
சீரமை பழநி யப்பச் செம்மல்

பேரமை பெருவீ டேகினார் பெயர்ந்து
சீரமை கார்த்திகைத் திருவா திரையில்
தெள்ளிய வள்ளி யப்ப சாமி
உள்ளிய பிரம உருவம தானார்
மார்கழி தன்னில் உரோகணி மீனில்

தார்புனை அழகப்ப சாமிவீ டடைந்தார்
மகநன் னாளில் தகவு சிறக்க
இராம சாமி என்னும் பெரியார்




தாமலி புகழைத் தானடைந் திட்டாரும்
பூர நாளே புகழர சப்பர்

ஏரமை வீட்டில் ஏகிய நாளாம்
அவிட்ட மீன்தான் அரும்புகழ் மிகவும்
தெவிட்ட நின்ற சீர்மிகு நாரணர்
உடற்சுமை போட்ட உயர்தின மாகும்
**தை**மதி தன்னிற் சார்ந்திடு பூரம்

ஐமலி பழனி யப்ப அடிகள்
மெய்ம்மலி பரகதி மேவி மகிழ்ந்தார்
பூராட மதுவே புகழ்மிகு வெள்ளேப்
பேராட நின்ற பெரியோர் அடைந்தது
மொழிபுனர் பூசம் முத்துவீ ரப்பர்

கனமார் உடலேக் கழற்றிய தாகும்
**பங்குனித்** திங்களிற் பார்மிருக சீரிடம்
அண்ணு மலேயெனுந் தண்ணிய பெரியோர்
எங்குந் தானுய்த் தங்கிய நாளாம்
என்றறிந் தன்னேர் இணையிலா வீட்டை

நன்றடை நாட்களில் நல்லடி போற்றிப்
பாசவேர் அதனேப் பறித்திட வேண்டி
நேசமார் உள்ளம் நிமலமாய் விளங்க
வழிபா டாற்றி வணங்கிடு வோமே.

முற்றிற்று

